ஸ்ரீராமஜயம்.

தெய்வப்புலமைக்

## கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்த

# சடகோபரந்தாதி

என்னும்

## ஆழ்வார்நூற்றந்தாதி.

௩-ம் பதிப்பு.








இஃது

சென்னை:

ஊ-புஷ்பரதசெட்டியா

தமது

கலாரத்நாகரம் என்னும்

அச்சுக்கூடத்திற் பதிப்பிக்க

1890

ஸ்ரீராமஜயம்.

# சடகோபரந்தாதி

என்கிற

# ஆழ்வார் நூற்றந்தாதி.

## தனியன்கள்.

தேவிற்சிறந்ததிருமாற்குத்தக்கதெய்வக்கவிஞன்
பாவிற்சிறந்ததிருவாய்மொழிபகர்பண்டிதனே
நாவிற்சிறந்தவம்மாறற்குத்தக்கநன்னாவலவன்
பூவிற்சிறந்தவாழ்வான்கம்பநாட்டுப்புலமையனே.

ஆரணத்தின்சிரமீதுறைசோதியையந்தமிழால்
பாரணஞ்செய்தவனைக்குருகூரனைப்பற்பலவா
நாரணனுமெனவேத்தித்தொழுக்கவிகல்குகொடைக்
காரணனைக்கம்பனைவாழ்த்துகளிப்புறவே.

நஞ்சடகோபனைப்பாடினையோவென்றுநம்பெருமாள்
விஞ்சியவாதரத்தாற்கேட்பக்கம்பன்விரைந்துரைத்த
செஞ்சொலந்தாதிகலித்துறைநூறுந்தெரியும்வண்ணம்
நெஞ்சடியேற்கருள்வேதந்தமிழ்செய்தநின்மலனே,

நாதனரங்கனயந்துரையென்னநங்கம்பனுன்றன்
பாதம்பரவியபைந்தமிழ்நூறும்பரிவுடனே
ஓதும்படியெனக்குள்ளந்தனையருளோதரிய
வேதந்தமிழ்செய்தமெய்ப்பொருளேயிதென்விண்ணப்பமே.

## நூல்.

வேதத்தின்முன்செல்கமெய்யுணர்ந்தோர்விரிஞ்சன்முதலோர்
கோதற்றஞானக்கொழுந்தின்முன்செல்கருணங்கடந்த
போதக்கடலெங்கடென்குருகூர்ப்புனிதன்கவியோர்
பாதத்தின்முன்செல்லுமேதொல்லைமூலப்பரஞ்சுடரே. (க)

சுடரிரண்டேபண்டுமூன்றாயினதுகடீர்ந்துலகத்
திடரிரண்டாய்வரும்பேரிருள்சீப்பனவெம்பிறப்பை
அடரிரண்டாமலர்த்தாளுடையான்குருகைக்கரசன்
படரிருங்கீர்த்திப்பிரான்றிருவாய்மொழிப்பாவொடுமே. (உ)

பாவொடுக்குந்நுண்ணிசையொடுக்கும்பலவும்பறையும்
நாவொடுக்குங்கல்லறிவொடுக்கும்மற்றுநாட்டப்பட்ட
தேவொடுக்கும்பரவாதச்செருவொடுக்குங்குருகூர்
பூவொடுக்கும்மமுதத்திருவாயிரம்போந்தனவே. (ங)

தனமாஞ்சிலர்க்குத்தவமாஞ்சிலர்க்குத்தருமநிறை
கனமாஞ்சிலர்க்கதற்காரணமாஞ்சிலர்க்காரணத்தின்
இனமாஞ்சிலர்க்கதற்கெல்லையுமாந்தொல்லையோர்வகுள
வனமாலையெம்பெருமான்குருகூர்மன்னன்வாய்மொழியே. (ச)

மொழிபலவாயினசெப்பம்பிறந்ததுமுத்தியெய்தும்
வழிபலவாயவிட்டொன்றாயதுவழுவாநரகக்
குழிபலவாயினபாழ்பட்டதுகுளிர்நீர்ப்பொருநை
சுழிபலவாயொழுகுங்குருகூரெந்தைதோன்றலினே. (ரு)

தோன்றுவபசிடதப்பொருடோன்றலுற்றார்தமக்கும்
சான்றாயிவையென்றபோதுமற்றென்பலகாலுந்தம்மில்
மூன்றாயினவுவினைந்தாரணத்தின்மும்மைத்தமிழை
ஈன்றான்குருகைப்பிரானெம்பிரான்றனிசைக்கவியே. (சு)

கவிப்பாவமுதமிசையின்கறியொடுகண்ணனுண்ணக்
குவிப்பான்குருகைப்பிரான்சடகோபன்குமரிகொண்கன்
புவிப்பாவலர்தம்பிரான்றிருவாய்மொழிபூசுரர்தம்
செவிப்பானுழைந்துபுக்குள்ளத்துளேநின்றுதித்திக்குமே. (எ)

தித்திக்குமூலத்தெளியமுதேயுண்டுதெய்வமென்பார்
பத்திக்குமூலம்பனுவற்குமூலம்பவமறுப்பார்
மூத்திக்குமூலமுளரிக்கைவாணகைமொய்குழலார்
அத்திக்குமூலங்குருகைப்பிரான்சொன்னவாயிரமே. (அ)

ஆயிரமாமறைக்கும்மலங்காரமருந்தமிழ்க்குப்
பாயிரநாற்கவிக்குப்படிச்சந்தம்பனுவற்கெல்லாம்
தாயிருநாற்றிசைக்குத்தனித்தீபந்தண்ணங்குருகூர்ச்
சேயிருமாமரபுஞ்செவ்வியான்செய்தசெய்யுட்களே. (கூ)

செய்யோடருவிக்குருகைப்பிரான்றிருமாலைநங்கள்
கையோர்கனியெனக்காட்டித்தந்தான்கழற்கேகமலம்
பெய்யோமவன்புகழேத்திப்பிதற்றிப்பித்தாய்த்திரியோம்
அய்யோவறிதுமென்றேயுபகாரத்தினூற்றலையே. (க0)

ஆற்றிற்பொதிந்தமணலின்றெருகையருமாமறைகள்
வேற்றிற்பொதிந்தபொருள்களெல்லாம்விழுமாக்கமலம்
சேற்றிற்பொதியவிழ்க்குங்குருகூரர்செஞ்சொற்பதிகம்
நூற்றிற்பொதிந்தபொருளொருகூறுநுவல்கிலவே. (கக)

இலவேயிதழுளவேமுல்லையுள்ளியம்பும்மொழியும்
சிலவேயவைசெழுந்தேனொக்குமேதமிழ்ச்செஞ்சொற்களால்
பலவேதமுமொழிந்தான்குருகூர்ப்பதுமத்திரண்டு
சலவேல்களுமுளவேயதுகாணென்றனியுயிரோ. (கஉ)

உயிருருக்கும்புக்குணர்வுருக்கும்முடலத்தினுள்ள
செயிருருக்கொண்டநந்தீங்குருக்குந்திருடித்திருடித்
தயிருருக்குந்நெய்யொடுண்டானடிச்சடகோபன்சந்தோ
டயிருருக்கும்பொருநற்குருகூரொந்தையந்தமிழே. (கங)

அந்தமிலாமறையாயிரத்தாழ்ந்தவரும்பொருளைச்
செந்தமிழாகத்திருத்திலனேனிலத்தேவர்களும்
தந்தம்விழாவுமழகுமென்னாந்தமிழார்கவியின்
பந்தம்விழாவொழுகுங்குருகூர்வந்தபண்ணவனே. (கச)

பண்ணப்படுவனவும்முளவோமறையென்றுபல்லோர்
எண்ணப்படச்சொற்றிகழச்செய்தானியலோடிசையின்
வண்ணப்படைக்குத்தனித்தலைவேந்தன்மலருகுத்த
சுண்ணப்படர்படப்பைக்குருகூர்வந்தசொற்கடலே. (கரு)

கடலைக்கலக்கியமுதமரர்க்களித்தான்களித்தார்
குடலைக்கலக்குங்குளிர்சங்கினான்குறையாமறையின்
திடலைக்கலக்கித்திருவாய்மொழியெனுந்தேனைத்தந்தான்
நடலைப்பிறப்பறுத்தென்னையுமாட்கொண்டநாயகனே. (கசா)

நாய்போற்பிறர்கடைதோறுநுழைந்தவொச்சினச்சிப்
பேய்போற்றிரியும்பிறவியினேனைப்பிறவியென்னும்
நோய்போமருந்தென்னுநுன்றிருவாய்மொழிநோக்குவித்துத்
தாய்போலுதவிசெய்தாய்க்கடியேன்பண்டென்சாதித்ததே. ()

சாதிக்குமேபரதத்துவத்தைச்சமயத்திருக்கைச், சேதிக்கு
மேயொன்று சிந்திக்குமேயதனைத் தெரியப், போதிக்குமேயெ
ங்குமோங்கிப்பொதுநிற்கு மெய்யைப் பொய்யைச், சோதிக்கு
மேயுங்கள் வேதமெங்கோன்றமிழ்ச் சொல்லெனவே. (கஅ)

சொல்லென்கெனோமுழு வேதச்சுருக் கென்கெனோ வெவர்க்
கும், நெல்லென்கெனோவுண்ணு நீரொன்கெனோமறை நேர்நிறுக்
கும், கல்லென்கெனோமுதிர்ஞானக்கனியென்கெனோ புகல, வல்
லென்கெனோகுருகூரொம்பிரான்சொன்னமாலையையே. (கக)

மாலைக்குழலியும்வில்லியுமாறனைவாழ்த்தலர்போம்
பாலைக்கடம்பகலேகடந்தேகிப்பணைமருதத்
தாலைக்கரும்பினரோலென்னுமோசையையஞ்சியம்பொற்
சாலைக்கிளியுறங்காத்திருநாட்டிடஞ்சார்வர்களே. (உ0)

சாரற்குறிஞ்சிதழுவும்பொழிற்றளிர்மெல்லடித்தண்
மூரற்குறிஞ்சிநகைமுகநோக்கற்குநீமுடுகும்
சூரற்குறிஞ்சிநெறிவினைதோறுந்துணுக்கெனுமால்
வாரற்குருகைப்பிரான்றிருவாணைமலையவனே. (உக)

மலையாரமுங்கடலாரமும்பன்மாமணிகுயின்ற
விலையாரமும்விரவுந்திருநாடனைவேலைசுட்ட
சிலையாரமுதினடிச்சடகோபனைச்சென்றிறைஞ்சும்
தலையாரெவரவரோவெம்மையாளுந்தபோதனரே. (உஉ)

போந்தேறுகவென்றிமையோர்புகலினும்பூந்தொழுவின்
வேந்தேறடர்த்தவன்வீடேபெறினுமெழிற்குருகூர்
நாந்தேறியவறிவன்றிருவாய்மொழிநாளுநல்கும்
தீந்தேறலுண்டுழலுஞ்சித்தியேவந்துசித்திக்குமே. (உங)

சித்தர்க்கும்வேதச்சிரந்தெரிந்தோர்கட்குஞ்செய்தவர்க்கும்
சுத்தர்க்குமற்றத்துறைதுறந்தோர்கட்குந்தொண்டுசெய்யும்
பத்தர்க்குஞானப்பகவர்க்குமேயன்றிப்பண்டுசென்ற
முத்தர்க்குமின்னமுதஞ்சடகோபன்மொழித்தொகையே. (உச)

தொகையுளவாயபனுவற்கெல்லாந்துறைதோறுந்தொட்டால்
பகையுளவாமற்றும்பற்றுளவாம்பழநான்மறையின்
வகையுளவாகியவாதுளவாம்வந்தவந்திடத்தே
மிகையுளவாங்குருகூரெம்பிரான்றன்விழுத்தமிழ்க்கே. (உரு)

விழுப்பாரினியெம்மையார்பிறவித்துயர்மெய்யுறவந்
தழுப்பாதொழிமினருவினைகாளும்மையப்புறத்தே
இழுப்பானொருவன்வந்தின்றுநின்றானிளநாகுசங்கம்
கொழுப்பாய்மருதஞ்சுலாங்குருகூரெங்குலக்கொழுந்தே. (உசு)

கொழுந்தோடிலையுமுகையுமெல்லாங்கொய்யுங்கொய்மகிழ்க்கீழ்
விழுந்தோடவதொர்சருகும்பெறாள்விறன்மாறனென்றால்
அழுந்தோடளருமனமுருகுங்குருகூரறையில்
எழுந்தோடவுங்கருத்துண்டுகெட்டேனிவ்விளங்கொடிக்கே. ()

கொடியெடுத்துக்கொண்டுநின்றேனினிக்கொடுங்கூற்றினுக்கோ
அடியெடுத்துக்கொண்டென்பால்வரலாகுங்கொலாரணத்தின்[ர்
படியெடுத்துக்கொண்டமாறனென்றுற்பதுமக்கரங்கள்
முடியெடுத்துக்கொண்டவந்தணர்தாளென்முடியெனவே. ()

என்முடியாதெனக்கியாதேயரியதிராவணன்றன்
பொன்முடியாற்கடலூர்த்தவில்லான்பொருணைத்துறைவன்
தன்முடியாலவன்றாளிணைக்கிழெப்பொருளுந்தழீஇச்
சொன்முடியாலமுதக்கவியாயிரஞ்சூட்டினனே. (உக)

சூட்டிற்குருகுறங்குங்குருகூர்தொழுதேன்வழுதி
நாட்டிற்பிறந்தவர்க்காளுஞ்செய்தேனென்னைநல்வினையாம்
சாட்டிற்புகுதவிட்டுய்யக்கொண்மாறன்கழல்பற்றிப்போய்
வீட்டிற்புகுதற்குமுண்டேகுறைம்மறைமெய்யெனிலே. (௩0)

மெய்யுமெய்யாயதுபொய்யும்பொய்யாயதுவேறுபடுத்
துய்யுமெய்யாயவுபாயம்வந்துற்றதுறுவினையைக்
கொய்யுமெய்வாள்வலவன்குருகைக்கரசன்புலமை
செய்யுமய்யன்றனக்கேதனித்தாளன்புசெய்தபின்னே. (௩க)

செய்யன்கரியனெனத்திருமாலைத்தெரிந்துணர
வையங்கரியல்லமாட்டாமறைமந்திரக்குருகூர்
அய்யன்கவியல்லவேற்பிறவிக்கடலாழ்வதல்லால்
உய்யும்வகையொன்றும்யான்கண்டிலேனிவ்வுயிர்களுக்கே. ()

உயிர்த்தாரையிற்புக்குறுகுறும்பாமொருமூன்றனையும்
செயிர்த்தார்குருகைவந்தார்திருவாய்மொழிசெப்பலுற்றால்
மயிர்த்தாரைகள்பொடிக்குங்கண்கணீர்மல்குமாமறையுள்
அயிர்த்தாரயிர்த்தபொருள்வெளியாமெங்களந்தணர்க்கே. ()

அந்தணர்க்கோநல்லருந்தவர்க்கோவன்றியோகியராய்
வந்தவர்க்கோமறவாதியர்க்கோமகரக்குழைசேர்
சுந்தரத்தோளனுக்கோவவன்றொண்டர்கட்கோசுடர்தோய்
சந்தனச்சோலைக்குருகைப்பிரான்வந்துசந்தித்ததே. (௩ச)

சந்தியுஞ்சந்திப்பதழுமவைதம்மிலேதழைக்கும்
பந்தியும்பல்லலங்காரப்பொருளும்பயிலுகிற்பீர்
வந்தியும்வந்திப்பவனாவணங்கும்வகையறிவீர்
சிந்தியுக்தென்குருகூர்தொழுதாட்செய்யுந்தேவனையே. (௩௫)

தேவனையேறியமூதறிவாட்டியைச்சிரழித்திர்
பூவனையேறியகோதையுள்ளம்புகுந்தானெவனொன்
றேவனையேறிமொழிகின்றபோதியம்பிற்றிறைவர்
மூவனையோகுருகூரனையோசொல்லுமுந்துறவே. (௩௬)

துறவாதவர்க்குந்துறந்தவர்க்குஞ்சொல்லவேசுரக்கும்
அறவாவிவையிங்கொராயிரகிற்கவந்தோசிலர்போய்
மறவாதியர்சொன்னவாசகமாமலட்டாவைப்பற்றிக்
கறவாக்கிடப்பரங்கென்பெறவோதங்கள்கைவலிப்பே. (௩எ)

கைதலைப்பெய்தரும்பூசலிட்டுக்கவியாலுலகை
உய்தலைச்செய்ததும்பொய்யென்றுமோசென்றவ்வூரறிய
வைதலைத்தேசுதுமோகுருகூரொன்னுமாறறியாப்
பைதலைக்கோகுகட்டிட்டேட்டிலேற்றியபன்பனையே. (௩அ)

பண்ணுந்தமிழுந்தவஞ்செய்தனபழநான்மறையும்
மண்ணும்விசும்புந்தவஞ்செய்தனமகிழ்மாறன்செய்யுள்
எண்ணுந்தகமைக்குரியமெய்யோகியர்ஞானமென்னும்
கண்ணும்மனமுஞ்செவியுந்தவஞ்செய்தகாலத்திலே. (௩௯)

காலத்திலேகுருகூர்புக்குக்கைக்கொண்மினோகடைநாள்
ஆலத்திலேதுயின்றோர்கொண்டவையிரண்டாயமைந்த
கோலத்திலேமுளைத்துக்கொழுந்தோடிக்குணங்கடந்த
மூலத்திலேசெல்லமூட்டியஞானத்தெம்மூர்த்தியையே. (௪0)

மூர்த்தத்தினையிம்முழுவேழுலகுமுழுகின்ற
தீர்த்தத்தினைச்செய்யவேதத்தினைத்திருமால்பெருமை
பார்த்தற்கருளியபாரதத்தைப்பணித்தானுநின்ற
வார்த்தைக்குருகைப்பிரானுங்கண்டானம்மறைப்பொருளே. ()

பொருளைச்சுவையென்றுபோவதெங்கேகுருகூர்ப்புனிதன்
அருளைச்சுமந்தவள்கண்ணின்கடைதிறந்தாறுபட்டுக்
குருளைச்சுமந்தவெளிபரந்தோட்டருங்கொள்ளைவெள்ளம்
உருளைச்சுடர்மணித்தேனாயந்தோவந்துதைக்கின்றதே. (சஉ)

வந்தடிக்கொண்டனகொங்கைகண்மாறன்குருகைவஞ்சி
கொந்தடிக்கொண்டகுழலுங்கலையுங்குலைந்தலையப்
பந்தடிக்குந்தோறுநெஞ்சம்பறையடிக்கின்றதென்றால்
செந்தடித்தன்னமருங்கிற்குண்டோகிற்குஞ்சிக்கனவே. (சஙு)

கனவாயினவுந்துரியமுமாயவையுங்கடந்து
மனவாசகங்களைவீசியமாறனைமாமறையை
வினவாதுணர்ந்தவிரகனைவெவ்வினையைத்தொலைத்த
சினவாரணத்தைக்குருகைக்கரசனைச்சேர்ந்தனமே. (சச)

சேராதனவுளவோபெருஞ்செல்வர்க்குவேதஞ்செப்பும்
பேராயிரந்திண்பெரும்புயமாயிரம்பெய்துளவத்
தாரார்முடியாயிரங்குருகூர்ச்சடகோபன்சொன்ன
ஆராவமுதக்கவியாயிரமவ்வரியினுக்கே. (சரு)

அரிவளைபொன்மகிழாயிழைக்கியுங்கொலந்திவந்து
முரிவளைமுத்தஞ்சினையுமயங்கமுறைசெறுத்து
வரிவளையும்மன்னமுந்தம்மிலேவழக்காடவலம்
புரிவளையூடறுக்குங்குருகூரெம்புரவலனே. (சசு)

புரைதுடைத்துப்பெரும்பொய்யுந்துடைத்துப்பிறர்புகலும்
உரைதுடைத்தங்குள்ளஞ்சறுடைத்தெம்முறுபிறவித் [ருகைக்
துரைதுடைத்தாட்கொண்டதொண்டர்பிரான்றுறைநீர்ப்பொ
கரைதிடைக்குங்கடலேதுடையேலன்பர்காற்சுவடே. (சஎ)

சுவடிறக்கத்தொடராசைக்களிற்றைத்தொடர்ந்திரண்டு
கவடிறக்கட்டியபாசத்தளைக்கண்பரிந்துசங்கக்
குவடிறக்குத்தியமாறப்பெயர்க்கொலையானைநங்காய்
இவடிறத்தொன்றும்படரந்திவானமிருள்கின்றதே. (சஅ)

இருளாய்ப்பரந்தவுலகங்களைவிளக்குமிரவி
பொருளாய்ப்பரந்ததுதான்பொதுசிற்றலின்மற்றதுபோல்
மருளாய்ப்பரந்தமயக்கத்துயக்கற்றமாறனெங்கோன்
அருளாற்சமயமெல்லாம்பரனுண்டென்றறிவுற்றதே. (சகூ)

அறிவேயுனைத்தொழுதேன்மற்றையாகமவாதியனாச்
செறிவேனெனவொன்றுசிந்தைசெய்யாதுசெய்தாயில்லா
நெறிவேதநின்றநிலையுணர்ந்தோன்குருகூர்நிலத்தைப்
பிறிவேனெனவுமெண்ணுதென்னைவீடுபெறுத்தினையே. (ருo)

பெறும்பாக்கியமுள்ளபோதும்பிழைப்புமுண்டேபிறர்பால்
வெறும்பாக்கிளத்திமெலிகின்றவென்னைவினைகொடுபோய்
எறும்பாக்கியதமியேனையமரர்க்குமேறவிட்டான்
குறும்பாக்கியமுப்பகைதவிர்த்தாண்டகுருகைமன்னே. (ருக)

குருகூர்நகரெம்பிரானடியாரொடுங்கூடியன்புற்
றொருகூறாயிலுறைவார்க்குமுண்டேயெம்மையுள்ளுஞ்சுற்றும்
இருகூர்வினையுமறுத்திறப்பார்க்குமியற்கையவ்வூர்
அருகூரருகிலயலயலார்க்குமரியதன்றே. (ருஉ)

அன்றுதவன்றிலையும்மன்றுவித்தென்னையன்னையுடன்
பின்றுதவண்ணமெல்லாம்பின்றுவித்துப்பிறைக்கொழுந்தை
ஒன்றுதவண்ணமுபாயமியற்றியதுழ்வினையை
வென்றுன்குருகைப்பிரான்மகிழேயன்றிவேறில்லையே. (ருங)

வேறேநமக்கிவனன்புடைமெய்யடியானென்றுள்ளம்
தேறேனெனலதுதேறத்தகுஞ்செந்தமிழ்ப்புலவர்க்
கேறேயெதிகளுக்கின்னமுதேயெறிநீர்ப்பொருநை
ஆறேதொடர்குருகூர்மறையோர்பெற்றவாணிப்பொன்னே. ()

பொன்னையுனைப்பதப்பொன்னுடன்றேபுலமைக்கொருவர்
உன்னையுனைத்துணைத்தற்குளரோவுயர்நாற்கவியும்
பின்னையுனைக்கப்பெறுவதல்லாற்பெருந்தண்குருகூர்த்
தென்னையுனைக்குமியற்குமிசைக்குஞ்சிகாமணியே. (ருரு)

மணித்தாரரசன்றன் ஞேலையைத் தூதுவன் வாய்வழியே, திணித்தாசழியச் சிதைமின் றலையையெந் தீவினையைத். துணித்தான் குருகைப் பிரான்றமி ழாற்சுரு திப்பொருளைப், பணித்தான் பணியன் றெனிற்கொள்ளுங் கொள்ளுமெம் பாவையையே. (ருகூ)

பாவைத் திருவாய் மொழிப்பழத் தைப்பசுங் கற்பகத்தின், பூவைப் பொருகடற் போதா வமுதைப் பொருள்சுரக்கும், கோவைப் பணித்தவெங் கோவையல் லாவென்னைக் குற்றங் கண்டென், நாவைப் பறிப்பினு நல்லரன் ஞேமற்றை நாவலரே.

நாவலந்தீவிற்கவிகளெல்லாஞ்சிலநாள்கழியப்
பூவலந்திவதுபோல்வவல்லாற்குருகூர்ப்புலவன்
கேவலந்திங்கறுப்பான்கவிபோலெங்கும்போய்க்கெழுமிக்
கூவலந்தீம்புனலுங்கொள்ளுமேவெள்ளங்கோளிழைத்தே. ()

இழைத்தாரொருவருமில்லாமறைகளையின்றமிழால்
குழைத்தார்குருகையிற்கூட்டங்கொண்டார்குமரித்துறைவர்
மழைத்தார்தடக்கைகளாலென்னைவானின்வரம்பிடையின்
றழைத்தாரறிவுந்தந்தாரங்கும்போயவர்க்காட்செய்வனே. ()

ஆட்செய்பலாவதெல்லாஞ்செய்தடியடைந்தேன்தன்றித்
தாட்செய்யதாமரையென்றலையேற்றனன்றன்குருகூர்
நாட்செய்யபூந்தொடைமாறனென்றேனினிநாட்குறித்துக்
கோட்செய்பலாவதுண்டேயென்றனுருயிர்கூற்றினுக்கே. (கூ0)

கூறப்படாமறையின்பொருள்கூறிக்குவலயத்தோர்
மாறப்படாவினைமாற்றியமாறன்மகிழலங்கல்
நாறப்படாநின்றபோதமுதாகுமதன்றிநஞ்சம்
தேறப்படாதுகெட்டேன்மன்றனுறுந்தன்டென்றலையே. (கூக)

தென்றலைத்தோன்றுமுபநிடதத்தையென்றீவினையை
வென்றலைத்தோன்றுநியாயநெறியைநிறைகுருகூர்

மன்றலைத்தோன்றுமதுரகவியைமனத்துள்வைப்பார்
என்றலைத்தோன்றெம்பிராற்கஎளென்னுவுக்குரியவரோ. (௬௨)

உரிக்கின்றகோடலினுந்துகந்தம்மெனவொன்றுமின்றி
விரிக்குந்தொறும்வெறும்பாழாவிடும்பிறர்புன்கவிமெய்
தெரிக்கின்றகோச்சடகோபன்றன்றெய்வக்கவிபுவியில்
சுரிக்கின்றநுண்மணலூற்றெருக்குந்தோண்டச்சுரத்தலினே. ()

சுரக்குந்திருவும்வறுமையுந்தீருந்தொடக்குவிட்டுக்
கரக்குமிருவினைமேன்மையுங்காணுங்கயல்குதிப்பத்
திரக்குங்கழைநெடுந்தாளிற்றொடுத்தசெந்தேனுடைந்து
பரக்கும்பழனவயற்குருகூர்வளம்பாடுமினே. (௬௪)

பாடுங்கறங்குஞ்சிறைவண்டுபோடப்பைந்தாட்குவளைத்
தோடுங்கறங்குங்குருகைப்பிரானிச்சுழல்பிறவி
யோடுங்கறங்கன்னவாழ்க்கையைநீக்கியுணர்வுதவி
வீடுந்திறந்துதந்தானையெஞ்ஞான்றும்விடகிலமே. (௬௫)

விடவந்தகாரவெம்பாலிற்பராங்குசர்மெல்லியலுக்
கிடர்வந்ததாலென்றிரங்கிப்புணர்ந்திலரின்னுயிரா
அடவந்தகாலன்கொலோவறியேனின்றிவ்வந்திவந்து
படவந்தகாரப்பெரும்புகையோடிப்பரக்கின்றதே. (௬௬)

பரவாதுகேட்டினிப்பையநடசுருதிப்பசுக்கள்
சுரவாதவற்றைச்சுரப்பித்தவைசொரியும்பொருட்பால்
கரவாதுதவியமாறன்கவியனையாயினியோர்
சரவாதமிப்புறமப்புறங்காணத்தடம்பணையே. (௬௭)

தடம்பணைத்தண்பொருநைக்குருகூர் தகைவகுள, வடம்
பணைக் கொங்கையில் வைக்கின்றிலர் மற்றைமாலையெல்லாம்,
உடம்பணைக்குந்தொறும் வெந்துகுமைந்து வெம்பாம்புமிழ்ந்த,
விடம்பணைக்கொண்டன வேபனிதோய்ந்திடு மேகங்களே. ()

மேகத்தையாற்றிற்கண்டேனென்றெண்ணுதுமெய்யன்குருகூர்ப், பாகத்தையாற்றுஞ்சொல்லாளைக்கண்ணீரின்றுளிபரந்த, மோகத்தையாற்றிக் கொண்டேகண்டமாற்ற மொழிந்தசிந்தைச், சோகத்தையாற்றிக்கொண்டே துளிதுவத்தொடங்குகவே.

தொடங்குகின்றனடஞ்சொல்லுகின்றேன்குருகூரர்த்தொழா
மடங்குகின்றன்மண்டலஞ்சுற்றியாடுகின்றன்மதங்கி
விடங்குகண்டார்பிழைப்பார்சவையீர்விரைந்தேகுமிந்தப்
படங்குவிண்டாற்பின்னைப்போகவொண்ணுதம்பதிகளுக்கே.

பதியந்தமிழென்னநான்மறையென்னவிப்பார்புரக்கும்
மதியந்தமிலொளிமாலைகளென்னமறைத்தமிழின்
அதியந்தருங்கவியாயிரஞ்செய்தளித்தானமுதம்
பொதியந்தருநதியங்குருகூரெந்தைபூசுரர்க்கே. (எக)

பூட்சிகண்டீர்பொய்ச்சமயப்புலவர்க்குப்போக்குவல்வாய்
வாட்சிகண்டீர்மற்றைமாயத்தருகர்க்குமன்னுயிர்கட்
காட்சிகண்டீர்தொண்டர்க்காநந்தவாரிகண்டீரறிவைக்
காட்சிகண்டீர்பரவுங்குருகூர்வந்தகற்பகமே. (எஉ)

கற்றுஞ்செவியுறக்கேட்டும்பருகிக்களித்துமுள்ளே
முற்றமுகப்பெய்துமூழ்கிக்குடைதுமுகந்துகொடும்
நிற்றுநிலையுறநீந்துதும்யாநிதமாறனெம்மை
விற்றும்விலைகொள்ளவும்முரியான்கவிவெள்ளத்தையே. (எங)

வெள்ளம்பரந்தனவோகமலத்தன்றிவெண்மதிமேல்
கள்ளம்பரந்தனவோமுயனிக்கிக்கவிக்கரசன்
தெள்ளம்பரந்தவயற்குருகூர்க்கொம்பின்செம்முகத்தெம்
உள்ளம்பரந்தனவோகண்களோவொன்றுமோர்கிலமே. (எச)

ஒருந்தகமைக்குரியாருமோங்கியஞானியரும்
சாருந்தனித்தலைவன்சடகோபன்றடம்பதிக்கே
வாருமுமக்கொருறுதிசொன்னேனும்மயக்கமெல்லாம்
தீருந்திருக்கறுஞ்சிந்தைசெவ்வேநிற்குந்தீங்கறுமே. (எரு)

அறுவகையார்யசமயமுமைவகைத்தாம்புலனும்
உறுவகையாற்சொன்னவோட்டமெல்லாமொழிவித்தொருங்கே
பெறுவகையாறெனச்செய்தபிரான்குருகூர்ப்பிறந்த
சிறுவகையாரவனாத்தொழுதோமெம்மைத்திண்டுகவே. (எ௬)

திண்டித்திருவடியைப்பற்றிக்கொண்டுசிந்தித்ததையே
வேண்டிக்கொளப்பெற்றிலேன்வினையேனிவ்வெறும்பிறவி
ஆண்டிற்பிறந்தவக்காலத்திலேயன்பனுயணிசீர்ப்
பாண்டித்தமிழ்த்திருநாட்டுருக்காட்டியபாவகற்கே. (எஎ)

பாவகத்தாற்றன்திருவவதாரம்பதினென்றென்றிப்
பூவகத்தாரறியாதவண்ணந்தன்னையேபுகழ்ந்து
நாவகத்தாற்கவியாயிரம்பாடிநடித்தளித்த
கோவகத்தாற்கன்றியென்புறத்தார்செய்குற்றேவல்களே. ()

குற்றேவலுஞ்செய்துமெய்கண்டுகைகொண்டுகும்பிட்டன்பு
பெற்றேனென்போலெவர்பேறுபெற்றூர்பின்னையேபிறந்து
வெற்றேவலினின்றபொய்யன்பர்தாங்களுமெய்யுணர்ந்தார்
எற்றேகுருகைப்பிரானெம்பிரான்றனியலிசைக்கே. (எ௯)

இயலைத்தொடுத்தின்னிசையைப்புணர்த்தெம்மையிப்பிறவி
மயலைத்துடைத்தபிரான்குருகூர்மதியைக்கொணர்ந்து
முயலைத்துடைத்துத்தனுவைப்பதித்துமுத்தங்குயிற்றிக்
கயலைக்கிடத்திகொல்சாளரத்தூடுகதவிட்டதே. (அ0)

இட்டத்திலுந்தமுள்ளத்திலும்மெண்ணிலும்மிருப்பின்
கிட்டத்திலும்வலியாருமுருகுவர்கேணியிலும்
பட்டத்திலும்பைந்தடத்திலுமோடைப்பழனத்திலும்
குட்டத்திலுங்கயல்பாய்குருகூர்குணங்களுக்கே. (அக)

குணம்வேண்டு மேநற் குலம்வேண்டு மேயக் குலத்தொழுக் காம், பிணம்வேண்டு மேசெல்வப் பேய்வேண்டு மேபெருந்தன் வகுள, மணம்வேண்டுர் தண்டெரி யற்பெரு மான்செய்யுண்

மாமணியின், கணம்வேண்டு மென்றறி வானைக்கண் டாற்
சென்று கைதொழுமே. (அ௨)

தொழும்பாக்கியவினைத்தொல்லைப்பிறவிச்சுழியிடைநின்
றெழும்பாக்கியமுடைத்தாக்கவுந்தென்னியலோடிசைந்த
கெழும்பாக்கெழுமியகீர்த்தியைநாளுங்கிளத்தியென்னுத்
தழும்பாக்கவும்வல்லகோசடகோபன்றயாபரனே. (அ௩)

பரந்தலைக்கும்பொருநைக்குருகூரொன்னிற்கண்பனிக்கும்
கரந்தலைக்கொள்ளுமுள்ளும்முருகுங்கவியாலுலகைப்
புரந்தலைக்கும்வினைதீர்த்தான்புனைமகிழ்ப்பூவுமன்றி
மரந்தலைக்கொள்ளவும்போதுநங்காயுன்மகள்கருத்தே. (அச)

கருத்திற்கருணைவைத்தேகுமிழ்தவுங்கலைமறையோர்
திருத்திற்றொருமணத்திருந்தினமயனீரினிறை
முருத்திற்செருந்தயலேயிவளோடுமுயற்கரும்பின்
குருத்திற்பிரசம்வைக்குங்குருகூர்சென்றுகூடுமினே. (அரு)

கூட்டங்கடோறுங்குருகைப்பிரான்குணங்கூறுமன்பர்
ஈட்டங்கடோறுமிருக்கப்பெற்றேமிருந்தெம்முடைய
நாட்டங்கடோறும்புனல்வந்துகாலப்பெற்றேமினிமேல்
வீட்டெங்கடோழர்க்கினிதேபெரும்போகம்விளைகின்றதே. ()

வினையாதொழியமருந்துமுன்டேயென்வினைதினையின்
இனையாக்கிளரவிளைகின்றதாற்கிளையாம்பிறவித்
தனையாசழியத்தடுத்தத்தென்பாலவழிதடுத்துக்
கனையாசறத்தடுத்தான்றான்குருகையிற்காப்புனமே. (அஎ)

புனம்பாழ்படுத்துப்புகல்பாழ்படுத்ததல்லாற்புகுந்தென்
மனம்பாழ்படுத்தனைவாழ்தியன்றேவழுவாநரகத்
தினம்பாழ்படுத்தபிரான்சடகோபனின்னுக்கலியின்
சினம்பாழ்படுத்தநின்றன்குன்றுசூழ்கின்றசெந்தினையே. ()

திணையொன்றியகுற்றமற்றுணர்ந்தோர்மகிழின்றிறத்தின்
மனையொன்றியகொடியாடுயின்றூலுந்தன்வாயடங்கா
வினையொன்றியவன்றிலுக்கிடங்காட்டவிரிதலைய
பனையன்றியுமுளதோதமியேற்குப்பழம்பகையே. (அக)

பகையாய்வருகின்றமூன்றையும்வேரினொடும்பறித்து
வகையாய்வருவனயாவையுமாற்றியிவ்வையமுய்யத்
தொகையாயிரங்கவிசொன்னோன்பெயர்சொல்லச்சூழ்பனியின்
புகையாமிருள்பின்னையென்னாட்கழியப்புகுகின்றதே. (கு0)

புகுகின்றதுவிருள்போகின்றதுவண்ணம்பூவைகண்ணீர்
உகுகின்றதென்றுயிரோய்கின்றதாலுலகேழுமுய்யத் [த்
தொகுகின்றவாயிரஞ்சொன்னோன்குருகைச்சொல்லால்விளங்க
தகுகின்றனரல்லர்மென்மேலுங்காதறருமவரோ. (கூக)

தருமமுங்காமமுந்தாவிலரும்பொருளுந்தணவாக்
கருமமுமாகியகாரணங்கண்டவக்காரணத்தின்
பெருமையுமாயப்பிணக்குந்தவிர்த்துறுபேதஞ்செய்யும்
இருமையுந்தீர்த்தபிரான்சடகோபன்றனின்னருளே. (கூஉ)

அருளிற்சிலமகிழாயிழைக்கீவர்கொலந்திவந்த
இருளிற்பிறிதுதுயருமுண்டோவியலோடிசையிற்
பொருளிற்சிறந்தவலங்காரவல்லியிற்போக்கினுள்ளம்
தெருளிற்கரும்பொக்குமாயிரம்பாப்பண்டுசெய்தவரோ. (கூங)

அவரோயயற்குமரற்குமல்லாவமரர்க்குமெல்லாம்
பவரோகையுற்றன்பணிகொள்ளுமோயடர்நீரினிட்ட
நவரோகையுட்கொள்ளச்செய்ததல்லானம்பிமாறனைப்போல்
எவரோதிருவாயிரமோக்கமாலையிசைத்தவரோ. (கூச)

தவஞ்செய்வதுந்தழல்வேள்விமுடிப்பதுந்தம்மையொறுத்
தெவன்செய்யுமெய்யன்குருகைப்பிரானெம்மையின்னமொரு
பவஞ்செய்கைமாற்றியபண்டிதன்வண்டமிழ்ப்பாவுமுண்டே
அவஞ்செய்கைமாற்றச்செவியுண்டோவுண்டறிவுமுண்டே. ()

உண்டாட்டியலுந்திருமாலுருவையுயர்த்துலகைத்
தொண்டாட்டியவந்துதோன்றியதோன்றறுறைக்குருகூர்
நண்டாட்டியநகைநாட்டங்களாலிந்தநாட்டையெல்லாம்
திண்டாட்டியகண்கள்போற்செய்யுமோகயதீங்குகளே. (கசு)

தீயைக்கிழித்தொருதிங்கட்கொழுந்தெனச்செய்ததல்லாற்
பேயைக்கிழித்தெனவன்றிற்பனைபிளவாருளவாம்
நோயைக்கிழிக்கும்வகுளநல்காரிந்தநுண்பிறவி
மாயைக்கிழியைக்கிழித்தெம்மைவாங்கிடவல்லவரோ. (கஎ)

வல்லம்புலிமுகவாயிற்கரும்பின்மறுபிறப்பைக்
கொல்லம்புலியொர்வகுளங்கொண்டார்கொடுங்கோகுகட்டிச்
சல்லம்புலிபிட்டெதிரிடப்பாய்வதுதாயென்றிங்கோர்
இல்லம்புலியுமுண்டம்புலிமீளவெழுகின்றதே. (கஅ)

எழுதியநாளும்வினையுந்தொகுத்தெம்மையிப்பிறவிப்
பழுதி[illegible]நூற்றிட்டுவைப்பரிதாற்புகழ்மெய்ப்புலவோர்
தொழுதி[illegible]யகனேதுங்கனற்றுறைநீர்ப்பொருநை
வழுதிநன்னாடன்திருவாய்மொழியென்மனத்தனவே. (கக)

மனையும்பெ[illegible]செல்வமுமக்களுமற்றைவாழ்வுந்தன்னை
நினையும்பத[illegible]நின்றபிரான்குருகூர்விமலன்
புனையுந்தமிழ்க்கவியாலிருணீங்கிப்பொருள்விளங்கி
[illegible]திவுற்றனகுற்றநீங்கினவேதங்களே. (க00)

---

மன்றேபுகழுந்திருவழுந்தூர்வள்ளன்மாறனைமுன்
சென்றேமதுரகவிப்பெருமாடென்றமிழ்த்தொடையில்
ஒன்றேபதிகமுரைத்தவன்பொன்னடியுற்றுநின்றான்
என்றேபதிகம்பதிகமதாகவிசைத்தனனே. (க0க)

சடகோபரந்தாதி முற்றிற்று.

---